# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 37 திருவள்ளுவர் ஆண்டு 2054 சூன் – 2023

## உள்ளே...












## கப்பல் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Aerial search | – வான்வழித் தேடல் |
| Aerial survey | – வான்வழி அளவை |
| Anemometer | – காற்றுவேக அளவி |
| Automatic signal | – தானியங்கிக் குறிகை |
| Beacon light | – ஒளி வழிகாட்டி விளக்கு |
| Boat basin | – உயிர் காப்புப் பயிற்சி |
| Bottom cargo | – கீழ்த்தளச் சரக்கு |
| Bulk–head | – கப்பல் சரக்கறைத் தடுப்பு |
| Bunker | – கப்பல் நிலக்கரித் தொட்டி |
| Capsized boat | – குடைசாய்ந்த படகு |
| Coastal ship | – உள்நாட்டுக் கப்பல் |
| Costal trade | – உள்நாட்டு வணிகம் |
| Code signal | – குறியீட்டுக் குறிகை |
| Crew | – கப்பல் ஊழியர்கள் |
| Deck cargo | – கப்பல் மேல்தளச் சரக்கு |
| Defunct port | – செயலற்ற துறைமுகம் |
| Dormitory | – துயில்கூடம் |
| Life boat | – உயிர்காப்புப் படகு |
| Life buoy | – உயிர்காப்பு மிதவை |
| Light keeper | – கலங்கரை விளக்கக் காப்பாளர் |
| Marine adviser | – கடல்துறை அறிவுரையாளர் |
| Master mariner | – கடல் இயல் வல்லுநர் |
| Open boat | – திறந்த படகு |
| Patrol boat | – காவல் படகு |
| Port conservator | – துறைமுகப் பாதுகாப்பாளர் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2054 மேழம் (சித்திரை)
சூன் – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# கனியிருப்பக் காய் கவர்ந்தற்று!

தமிழ்தான் தமிழருக்கான முகவரி. ஒருவருக்குப் பெற்ற தாய் எவ்வளவு முகாமையோ அவ்வளவு முகாமை அவரின் தாய்மொழி. தமிழைப் பயன்படுத்துங்கள் என்று கூறினால் பிறமொழிகளைப் பயன்படுத்தாது அறவே வெறுத்து ஒதுக்குக என்று பொருள் இல்லை. இன்றைய நிலையில் பன்மொழிகளையும் கற்றுத் தேர்தல் இன்றியமையாததாகிறது. அதனால் கற்றுத் தேர்க. ஆனால் பயன்படுத்தும்போது கலப்பின்றிப் பயன்படுத்துக என்பதே இதன் நோக்கம். தமிழுடன் ஆங்கிலத்தையும் கலந்து இருமொழிகளையும் கொல்லாதே. அது பொறுத்துக்கொள்ள முடியாத பெருங்குற்றம். உலகின் பழைமையும் பெருமையும் வாய்ந்த செந்தமிழ்மொழி பிறமொழிக் கலப்பால் சிதையவும், சீர் குலையவும் வாய்ப்பு ஏற்படுகிறது. இதைத் தடுத்தல் நம் ஒவ்வொருவரின் பணியாகும். மொழியைச் சிதைத்தால் பண்பாடு சிதையும். ஒரு மொழி அழிந்தால் அந்த இனமே அழிந்துவிடும் என்கின்றனர் மொழியியல் ஆய்வாளர்கள். நம் தாய்மொழியை நாம் மறந்தால் எதிர்காலத் தலைமுறையினரின் நிலை என்ன? தாய்மொழி வாயிலாக அறநெறிக் கருத்துகளை இளம் உள்ளங்களுக்கு வழங்கும் போது அவை எளிமையாகவும் இனிமையாகவும் நெஞ்சத்தில் புரியும். மொழியை இழந்தவன் விழியை இழந்தவனுக்கு ஒப்பாவான்.

உணவு, உடை, உறையுள் என்பது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத் தேவைகளாகும். தொல்காப்பியத்தில் வரும் "உணா" என்ற சொல் உணவைக் குறிக்கும்.

"உணாவே வல்சி உண்டி ஓதனம்

அசனம் பகதம் இசை ஆசாரம்

உறை ஊட்டம்"

என்று உணவைக் குறிக்கும் சொற்களைப் பட்டியல் இடுகிறது பிங்கல நிகண்டு. மேலும், கொறித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல் என்றிவை ஐவகை உணவே என்றும் கூறுகிறது.

உண்பன என்பதற்கு அரிசிச்சோறு, புழுங்கல், பொங்கல் போன்றன. கொறிப்பன வரிசையில் வற்றல், வடாம் போன்றன அடங்கும். பச்சடி போன்றன நக்குவன வரிசையில் வரும். பருகுவன என்பதில் பானகம், கஞ்சி, கன்னலமுது (பாயசம்), கூழ் ஆகியன இடம்பெறும். அப்பம், இட்டலி போன்றன தின்பன வரிசையில் வரும்.

இப்படிப் பார்த்துப் பார்த்துச் செய்முறை, சுவை, உணவின் நிலை எனப் பெயரிட்ட நம் மூத்தோரை மறந்து அவர்கள் கூறிய பண்பாட்டு இயைபுடனான சொற்களையும் மறந்து ஒரே சொல்லில் Rice சாப்பிடுகிறீர்களா? Coffee சாப்பிடுகிறீர்களா? என இயல்பாக முடித்துவிடுகிறோம். தமிழில் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்பது போல் எல்லாச் சொல்லும் காரணக் காரியத் தொடர்பு கொண்டவையே.

ஊன்சோறு, செஞ்சோறு, நெய்ச்சோறு, புளிச்சோறு என்பனவும் பல்வேறு உணவகங்களில் Briyani, Red rice, Gee rice, Tamarind rice என ஆங்கிலத்தில் மட்டுமே பெயர்ப்பலகையில் உள்ளதைக் காணும் போது எவ்வளவு பசி இருந்தாலும் உணவகத்தில் உள் நுழைய மனம் வரவில்லை.

நாம் அணியும் உடைகளே நமது அடையாளம். அவை நமக்குப் பண்பாட்டையும் சொல்கின்றன. தமிழர்கள் என்றாலே வேட்டி, சட்டை, சேலை, பாவாடை, தாவணி என்ற நிலையில் அவை நம் பண்பாட்டை வெளிப்படுத்துகின்றன. அலுவலகப் பணிகளுக்குக் காற்சட்டை – சட்டை (Pant – Shirt) எனப் பெரும்பான்மை இருக்க, சிறப்பு நாள்களிலாவது நம் மரபார்ந்த உடைகள் அணியலாமே!. காலத்துக்கு ஏற்ப உடை மாற்றம்

என்றாலும் அதையும் நலம் கருதி நாம் அணிய வேண்டும். மாதக் கணக்கில் துவைக்காமல் பயன்படுத்தலாம் எனும் சீன்சு உடையால் நம் உடலுக்கு ஒரு நன்மையும் இல்லை. நன்மை உண்டெனில் அது தோல் மருத்துவத்துக்குத்தான்.

மரபுசார் உடைகளைப் பண்டிகை நாள்களிலும் வீட்டின் நன்னிகழ்வுகளிலும் அணிய வேண்டும். ஒட்டுமொத்தக் குடும்பமும் இதனைப் பின்பற்ற வேண்டும். அப்போதுதான் இளம் தலைமுறையினருக்கு இதன் மேன்மை புரியும். வேட்டி, சட்டை அணிந்து செல்பவர்களுக்கு எப்போதுமே ஒரு தனி மதிப்புத் தானாகவே ஏற்படும். மரபுசார் உடைகளை நாளும் அணியாவிட்டாலும் கூட கிழமையில் ஒரு நாளாவது அணிய முயல்வோம். இவ்வாறு பண்பாட்டு உடைகளை அணிவதால் அதையே வாழ்வின் அடிப்படையாகக் கொண்டுள்ள தொழிலாளர்களின் வாழ்வும் வளம் பெறும்.

மூன்றாம் அடிப்படைத் தேவையானது உறையுள் அதாவது வீடு. வீடுகளின் நோக்கமே விருந்தோம்பலுக்காகத்தான். இன்னும் சரியாகச் சொன்னால் இல்லறத்தின் மாண்பே இல்லார்க்கு உதவுதல் ஆகும். இல்லம் என்பதே வீடு என்பதைக் குறிக்கும் மறைச்சொல். அது முற்றிலும் பொதுநலம் சார்ந்த குறியீட்டுச் சொல். இன்றைக்கு வீடு என்பது ஏந்தை, வளமையை, ஆடம்பரத்தைப் பிறர்க்குக் காட்டம் தனிச்சிறையாக உள்ளது. அங்கும் A.c., Fridge, Dinning Table, Sofa set, Mixi, Grinder, Washing machine, Fan, Light, T.V. என எண்ணற்ற அயல்மொழிச் சொற்கள் நம்மை ஆண்டுகொண்டிருக்கின்றன. ஒன்றுக்காவது தமிழ்ச்சொற்கள் நம் குழந்தைகளுக்குத் தெரியுமா? என்றால் உடனே விடைகூறிடலாம் இல்லை என்று. இல்லில் தொடங்க வேண்டும் நம் தாய்மொழியாம் தமிழ்மொழி. நாம் கூற வேண்டும் நம் அன்னைத் தமிழின் அருமையை, இன்றியமையாமையை. மின் விசிறியை இயக்கு, தொலைக்காட்சியை இயக்கு, விளக்கை எரியவிடு, மெத்தையில் உட்கார், உணவு மேசையில் அமர்க, சீர்வளி, தேய்ப்பி, அரைவி, கலக்கி என்று கூறுங்கள். முதலில் விழிக்கும் குழந்தைகள் நாள்கள் செல்லச்செல்ல அவர்களும் அழகுத்தமிழில் கூறுவர்.

"இனிய உளவாக இன்னாத கூறல்

கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

என்றார் வள்ளுவப் பெருந்தகை. நல்ல அமிழ்தம் போன்ற சுவையுடைய கனிகள் இருக்க அவற்றை விடுத்து, புளிக்கும் சுவையுடைய காயை உண்போம் எனில் அது யார் தவறு.? அதுபோன்றதுதான் நம் செந்தமிழ்ச் சொற்களை விடுத்து அயல்மொழிச் சொற்களை நாம் பேச எத்தனிப்பது.

குழந்தைகளுக்குத் தனித்தமிழ்ப் பெயரிடல் மிக மிக இன்றியமையாத ஒன்று. இதனைச் சிலர் இயல்பல்ல என்றாலும் சரி, பெயரில் என்ன இருக்கிறது? என்றாலும் சரி, அவர்களுக்குத்தான் இந்த விடை. ஒருவரின் பெயர் அவரது அடையாளம். உலகில் வாழும் செம்மொழி, சங்கம் வைத்து வளர்த்த மொழி, இயல் – இசை – நாடகம் என மூன்றாக வளர்ந்த மொழி எனத் தமிழுக்குத் தனிச்சிறப்புகள் ஏராளம். ஆனால் நாம் நம் மொழியின் சுவை அறியாமல் பிற மொழிகள் மீதான ஈர்ப்புக் கொண்டுள்ளோம். குறிப்பாக ஆங்கில ஈர்ப்பு. ஆங்கிலம் அறிவல்ல, அது ஒரு மொழி. அவ்வளவே! ஆங்கிலம் பேசுபவர்களைக் கண்டால் வியந்து மிக்க அறிவாளி என நமக்கு நாமே எண்ணிக்கொள்கிறோம். சரி, குழந்தைகளுக்குப் பெயர் வைப்போம் என எண்ணும்போது பெற்றோர் முதலில் நாடுவது சோதிடம், எண் கணியியல் (Numerology) என்ற பெயரில், குழந்தையின் பெயர் ஷ, ஸ, ஸ்ரீ, ஹ என்ற எழுத்தில் ஆரம்பிக்க வேண்டும் என்று யாரோ எழுதிக்கொடுத்ததும், இவையெல்லாம் வடமொழி எழுத்துகள் என்ற புரிதல்கூட இல்லாத பெற்றோர்களும் உண்டு. இரமேஷ், சுரேஷ், சதீஸ், ஹரீஸ் என எண்ணற்ற வடமொழிப் பெயர்கள் முழங்கிய காலத்திற்குப் பின் இன்று சற்றே மனம் இன்புறலாம். ஏனெனில் இன்றைய காலகட்டத்தில் பலரும் தம் பிள்ளைகளுக்குத் தேடித்தேடி தமிழ்ப்பெயர் சூட்டுகிறார்கள்.

ஆம்பல், யாழினி, கவின், வெண்பா, எழிலன், பொழிலன், முகில், தாழை என எத்தனையோ இனிமையான தமிழ்ப்பெயர்கள் இருக்க, பிறமொழி ஈர்ப்பால் குழந்தைகளுக்குப் பொருளற்ற, பொருத்தமற்ற பெயர்கள் சூட்டப்படுவது தவிர்க்கப்பட வேண்டும். இனிய, தனித்தமிழ்ப்

பெயர்களைச் சூட்டுவதே அறிவாண்மையாகும். ஏனெனில் பெயர் என் அடையாளம் எனக் கொண்டால், அப்பெயர் ஒலிக்கும் மொழியே என் உணர்ச்சியின் தாய்மொழியாக அமைதல் வேண்டும். எனவே உயரிய மொழியான தமிழைக் காக்க முடிந்தவரை பிறமொழிச் சொற்களைக் கலக்காது தூய தமிழில் பேசுவதோடு அதனைப் பேணிப் பாதுகாக்க வேண்டும்.

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு"

என்ற பாவேந்தரின் வழிநின்று மொழிவளமும் அதன் தனித்தன்மையும் காப்போம். நிற்க.

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன். அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பிரெஞ்சுமொழி – ஓர் ஆழ்ந்த அறிமுகம்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "கோரண்டீனும் தனிப்பமும்" என்னும் கட்டுரையும், தமிழ்நாடு அரசு, மேனாள் மொழிபெயர்ப்புத் துணை இயக்குநர் முனைவர் கு. பாலசுப்பிரமணியன் அவர்கள் வழங்கிய, பாவேந்தர் பாரதிதாசனாரின் "எந்நாளோ?" எனும் பாவின் ஆங்கில மொழிபெயர்ப்பும், பொறிஞர் பா.வே. இரத்தினம் அவர்களின், "தமிழில் கலைச்சொல் தேடல்" எனும் கட்டுரையின் தொடர்ச்சியும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட இணையவழிப் பயிலரங்கில் வாழ்த்துரை வழங்கிய மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் மரு. மு.செம்மல் அவர்களுக்கும், 80ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த இலங்கை யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை மேனாள் தலைவர் பேரா. சி. சிவலிங்ராஜா, அகராதியியல் அறிஞர் பேரா. முனைவர் ச. சச்சிதானந்தம், சென்னை – மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச்சங்க நிறுவனச் செயலாளர் கலைமாமணி முனைவர் சேயோன் ஆகியோருக்கும் என் அன்பு நன்றிகள். பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா.பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன். தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

## மயங்கொலிச் சொல்

ஆர – 1. உவமைச்சொல்
2. மிக ( வயிறார உண்ணல், மனதார வாழ்த்தல்)
" ஆரப்படுக" (நாலாயிர. திருவாய். 10: 10: 5)

ஆற – ஒரு வினையெச்சம் – தணிய
"ஆறுவது சினம்" ( ஆத்திசூடி)
"ஆக்கப் பொறுத்தவர் ஆறப்பொறுக்க வேண்டும்"
(பழமொழி)

# பிரெஞ்சு மொழி – ஓர் ஆழ்ந்த அறிமுகம்

முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு






La langue française est une femme. Et cette femme est si belle, si fière, si modeste, si hardie, si touchante, si voluptueuse, si chaste, si noble, si familière, si folle, si sage, qu'on l'aime de toute son âme, et qu'on n'est jamais tente de lui être infidèle.

(பிரெஞ்சு மொழி ஒரு பெண். இந்தப் பெண் மிக அழகானவள், மிகக் கர்வமானவள், மிக அடக்கமானவள், மிகத்துணிவானவள். மிக உணர்ச்சியானவள், மிகவசீகரமானவள், மிகக்கற்புள்ளவள், மிகஉயர்வானவள், மிகப்பழக்கமானவள், மிகக்கிறுக்கத்தனமானவள், மிக அறிவானவள், ஆழ்ந்த ஆத்மபூர்வமாக அவளை நேசிக்கும் நாம் அவளுக்கு விசுவாசமில்லாதிருக்க ஒருபோதும் முயன்றதில்லை.)

–Anatole France. 1894 – 1924.

## பிரெஞ்சு மொழியின் சிறப்பு

Bonjour! "மொழி மக்களின் மனம், மனம் என்பது அவர்களின் மொழி" எனும் Johanan Herder (1746–1803)இன் கருத்துக்கு அமைய, பிரெஞ்சு மொழி – La langue française பிரெஞ்சியர்களின் மனதை – பண்பாட்டை வெளிப்படுத்தும் மொழி. பொதுவாக, பிரெஞ்சுக்காரர்களின் உரையாடல்களில், 'bonjour – பொன்ஸ்ஊ (நன்னாளாக – வணக்கம்), s'il vous plait – ஸ்இல்வூப்ளே (தயவுசெய்து), merci – மெர்ஸி (நன்றி), aurevoir – ஒவ்வா (மீண்டும் சந்திப்போம்) முதலான மரியாதைச் சொற்கள் இடம்பெறுவது பிரெஞ்சுமொழி மரபு. 'bonjour உம் சொல்லாமல், aurevoirஉம் சொல்லாமல் உரையாடல் என்ற ஒன்று கிடையாது. (bonjour = bon +jour. Bon – நல்ல, jour நாள். au revoir = au +re + voir.

re – மீண்டும், எழுசை – சந்தித்தல், பார்த்தல்). ஒருவர் எவராயிருந்தாலும், அவர் ஆண் எனில், Monsieur– மொஸ்இயூ (ஐயா) என்றும், பெண் எனில், Madame–ம்அத்டம் (அம்மணி) என்றும் அவரை மதித்துச் சொல்வது பிரெஞ்சு ஒரு மரியாதையான மொழி என்பதற்கான பல எடுத்துக்காட்டுகளில் சிறப்பானதாகும்.

பிரெஞ்சு – Le français பிரான்ஸில் பிறந்த மொழி. பிரெஞ்சு சொல்வளமிக்க அழகான மொழி. புதுமைக்கும் நாகரிகத்துக்கும் பேர்பெற்று விளங்கும் செம்மொழி பிரெஞ்சு மொழி. உலக மொழிகளின் செல்வாக்கிலும் முக்கியத்துவத்திலும் ஆங்கிலத்துக்கு அடுத்த இடத்தில் இருப்பது பிரெஞ்சுமொழிதான்! பதினேழாம், பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவில் கோலோச்சிய பிரெஞ்சு சர்வதேசச் சந்திப்புக்களின் போது முக்கிய இடத்தை எப்போதும் வகிக்கிறது. பிரெஞ்சு மொழி எனும் போது – La langue française, என்றும் பிரெஞ்சு எனும் போது – Lefrançais என்றும் வழங்கப்படும். (la பெண்பால், le ஆண்பால்). சமுதாய மொழியியல் அடிப்படையில் (termes sociolin guitiques) பிரெஞ்சு ஒன்பதாவது இடத்தில் அமைகிறது. ஐரோப்பிய ஒன்றியத்தில் இச் செவ்வியல் மொழிக்கு முக்கியம் உண்டு. G8 நாடுகளின் மொழிகளில் ஒன்றாகவும் இது விளங்குகிறது. உலகில் வெளியாகும் விஞ்ஞானப் பதிப்புகளில் பல இம்மொழியிலேயே வெளிவருகின்றன. பதினாலாம் லூயியின் காலத்திலிருந்து முதலாவது உலகப்போர் வரை பன்னாட்டுப் பரிமாற்றத்தில் முதன்மை மொழியாகப் பிரெஞ்சு திகழ்ந்தது. 1967ஆம் ஆண்டு தொடக்கம் ஐக்கிய நாடுகள் சபையில் பிரெஞ்சும் ஆங்கிலமும் சம அந்தஸ்தில் உள்ளன.

## பிரெஞ்சின் பிறப்பு வரலாறு

பிரெஞ்சு ரோமானிய சாம்ராஜ்யம் உடைந்ததன் விளைவாக கி.பி. 500 ஆண்டளவில் பேச்சு இலத்தீனிலிருந்து உருவாகிய இளம்மொழி. மொழிப்பெயரான français ஃப்ரான்ஸே என்பது françe – ஃப்ராங்க் மொழிச்சொல். இது கோலுவா, இலத்தீன், ஃப்ராங்க் ஆகிய மூன்று மொழிகளின் கலப்பால் ஆனது., இம்மொழியின் 86.5% சொற்கள் இலத்தீன் சொற்கள். இது இலத்தீனிய மொழியாகக் கொள்ளப்படுகிறது. ஆனால் வாக்கிய அமைப்பானது ரோமானியத் தன்மையிலும் பார்க்க ஜெர்மனியத் தன்மையையே அதிகம் கொண்டிருக்கிறது. ஃப்ராங்க் ஜெர்மனிய மொழிகளில் ஒன்றாகும். ஆங்கிலத்தை அடுத்து இரண்டாவது சர்வதேச மொழியாகவும் நாகரிகமொழியாகவும் திகழும் பிரெஞ்சு இந்தோ – ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் சிறப்புகள் அதிகம் கொண்ட முக்கிய மொழி. பிரெஞ்சு, உலக மொழிகளின் பாகுபாட்டில் ஐரோப்பிய மொழிக்குலத்தையும், இலத்தீன் (ரோமானிய) குடும்பத்தையும் சேர்ந்தது.




வரலாற்றில், பிரான்ஸின் பூர்வீகப்பெயர் கோல் – La Gaule, பூர்வீகமொழி கோலுவா – le gaulois. ஜூலியஸ் சீசர் தலைமையில் ரோமானியர் கோல் மீது படையெடுத்து வெற்றி கொண்ட பின்னர், தமது மொழியான இலத்தீனை மக்களுக்குத் திணித்தனர். பின்னர் ஜெர்மனிய இனத்து பிராங்க் – franc பிரிவினர் இம்மண்ணில் பரவலாகக் குடியேறி நாட்டைத் தம்வயப்படுத்தினர். தமது மொழியான ஃப்ரான்ஸிக் le francique சொற்களை, கோலுவா – இலத்தீனுடன் கலப்புச் செய்தனர். இதன் விளைவாக ஃப்ரான்சியென் – le francien எனும் மொழி உருவானது. பிரெஞ்சிய மன்னர்களின் மொழியாக இருந்த இம்மொழி ஃப்ரான்சுவா –lefrançois என்றாகி இறுதியில் இன்றுள்ள : ப்ரான்ஸ்ஏ – lefrançais ஆனது. ஃப்ரான்சியென் தலைநகரமான பாரிஸின் கிளை மொழி. மன்னர்களின் இராசதானி பாரிஸ். மன்னர்களின் மொழி நாட்டின் மொழியாக உயர்ந்தது. பிரான்சின் பிரதேசங்களில் அவ்வவ் பிரதேச மொழிகள் பேசப்பட்டாலும் ஃப்ரான்ஸியென் மற்றைய பிரதேச மொழிகளை வீழ்த்தி முதல்நிலைக்கு வந்து தேசியமொழியாகிவிட்டது. இப்பிரதேச மொழிச்சொற்கள் சில பிரெஞ்சில் நிலவுகின்றன.

Franc> francique > francien > françois>français

Anatole France இன் மொழியின் வரலாற்றை 1. பண்டைய பிரெஞ்சு, 2. இடைக்காலப் பிரெஞ்சு, 3. பண்பட்ட பிரெஞ்சு, 4. நவீன பிரெஞ்சு, 5. தற்காலப் பிரெஞ்சு என ஐவகையாகப் பிரித்து ஆராயலாம். 10–14ஆம் நூற்றாண்டளவில் வழங்கப்பட்ட பிரெஞ்சு பண்டைய பிரெஞ்சு எனவும், 14 – 16ஆம் நூற்றாண்டு காலப்பகுதியில் வழங்கப்பட்ட பிரெஞ்சு இடைக்காலப் பிரெஞ்சு எனவும், 1610க்கும் – 1789க்கும் இடைப்பட்ட காலத்தில் வழங்கப்பட்ட பிரெஞ்சு பண்பட்ட பிரெஞ்சு எனவும், 1789க்கும் 1914க்கும் இடைப்பட்ட காலத்தில் வழங்கப்பட்ட பிரெஞ்சு நவீன பிரெஞ்சு எனவும், 20ஆம் நூற்றாண்டு தொடக்கம் இன்றுவரை வழங்கப்படும் பிரெஞ்சு தற்கால பிரெஞ்சு எனவும் வகுக்கப்பட்டிருக்கிறது.

## பிரெஞ்சு வழங்கும் நாடுகள்

பதினேழாம், பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவில் கோலோச்சிய பிரெஞ்சை இன்று இக்கண்டத்தில் 63 மில்லியன் மக்களும், உலகில் 200 மில்லியன் மக்களும் பேசுகிறார்கள். தாய்மொழி, அலுவலக மொழி, துணைமொழி என 51 நாடுகளில் இது வழங்கப்படுகிறது.

| ஐரோப்பா | ஆபிரிக்கா | அமெரிக்கா | ஆசியா | ஓசியானி |
|---|---|---|---|---|
| பிரான்ஸ்.பெல்ஜியம்.<br>லக்ஸம்பேர்க்.சுவிஸ்.<br>மொனொக்கோ<br>அந்தோரா.<br>பல்கேரியா.<br>மோல்டா | செனெகால். மாலி. கினியா.<br>இருகொங்கோக்கள். சாட்.<br>புறுண்டி. கமறூன். டிஜ/புதி.<br>மடகஸ்கார் அல்ஜீரியா<br>மொரொக்கோ. துனிசியா,<br>மொரிசீயஸ். றியூனீயன். | கியூபெக் (கனடா). ஐத்தி.<br>மார்த்தினிக். குவாதலூப்.<br>குயானா... | இந்தியாவில்புதுச்சேரி.<br>காரைக்கால். மகே.<br>ஏனம். ஸந்தாநகூர்.<br>வியட்நாம்,கம்பூச்சியா,<br>லாவோஸ்... | நியூகலிடோனியா.<br>பொலினீசியா... |

பெல்ஜியம், லக்ஸம்பேர்க், சுவிஸ், மொனொக்கோ, அந்தோரா, கனடா–கியூபெக், ஐத்தி, மார்த்தினிக், குவாதலூப், குயானா செனெகால், மாலி, கினியா, இரு கொங்கோக்கள், புறுண்டி, கமறூன், சாட், டிஜூபுதி, மடகஸ்கார், அல்ஜீரியா, மொரொக்கோ, துனிசியா, லெபனான் என 51 நாடுகளில் பிரெஞ்சு வழங்கப்படுகிறது. அமெரிக்கா, இங்கிலாந்து, இத்தாலி, ஒல்லாந்து, சிரியா, பிரேஸில் முதலான நாடுகளில் இரண்டாவது மொழியாகவும் கற்பிக்கப்படுகிறது. இந்தியாவில் புதுச்சேரி, காரைக்கால், மகே, ஏனம், ஸந்தாநகூர் ஆகிய இடங்களில் இன்னமும் வழக்கில் உள்ளது.

## ஒலியும் எழுத்தும் – Les sons et les lettres

இது பேச்சுவழக்கு, எழுத்து வழக்கு என இரட்டை வழக்கு (Diglossic) உடைய மொழி.

பிரெஞ்சு மொழி எழுத்துகள் பிறப்புமொழியான இலத்தீன் நெடுங்கணக்கிலிருந்து தழுவி அமைக்கப்பட்டவை. சொற்களும் தாய்மொழியிலிருந்து 86.5% பிரெஞ்சு மயப்படுத்தப்பட்டவை. இலக்கணமும் மூலமொழியை ஒட்டி அமைந்துள்ளது. பிரெஞ்சில் 26 எழுத்துகள் உண்டு. பிரெஞ்சில் 6 உயிர்களும் (a,e,i,o,u,y.), 20 மெய்களும் உண்டு. பிரெஞ்சிய எழுத்துகள் பால் காட்டுகின்றன. a,b,c,d,e,g,i,j,k,O,p,q,t,u,v,w,y,z ஆகியன ஆண்பால் எழுத்துகளாகவும், f,h,l,m,n,,r,s,x ஆகியன பெண்பால் எழுத்துகளாகவும் உள்ளன. எழுத்துக்கு வரிவடிவம், ஒலி வடிவம் என இரு வடிவங்கள் உண்டு. பிரெஞ்சின் 26 எழுத்துகள் 36 ஒலிகளைப் பிறப்பிக்கின்றன. 6 உயிர்களும் 16 உயிரொலிகளையும் உண்டாக்குகின்றன. இதனால் இம்மொழியில் எழுத்துகளுக்கும் ஒலிகளுக்கும் இடையில் ஒழுங்கான தொடர்பு இருப்பதில்லை.

முதலெழுத்து தமிழைப் போலவே அ(ஆ) – a என்றே ஒலிக்கப்படுகின்றது. சிறப்பெழுத்தாக பிரெஞ்சில் Ç – ஸ் இருக்கிறது. தமிழின் ழ வுடன் ஒப்பிடக்கூடிய எழுத்து பிரெஞ்சில் து உள்ளது. உயிர் நெடில்களுக்கு இருமொழிகளிலும் குறில்களுடன் குறியீட்டெழுத்துகள் சேர்க்கப்படுகின்றன – (m–a,M.–á.). ண், ட், ச், ள் என்கிற ஒலிகள் பிரெஞ்சில் கிடை யாது. h எழுத்துக்கு உச்சரிப்பு இல்லை.

ஆங்கில எழுத்துகளிலிருந்து பிரெஞ்சு எழுத்துகளை வேறுபடுத்துவது அசைக்குறிகள் தான். உச்சரிப்புகளை வேறுபடுத்துவதற்காக உயிரெழுத்துகளின் மேல் les accents – அசைக்குறிகள் (அசையழுத்தங்கள்) இடப்படுகின்றன. இவை நான்கு வகை. மொழியின் ஆரம்ப வரலாற்றில் இவ்வகை அசைக்குறிகள் இருக்கவில்லை. குறிப்பாக உயிரெழுத்தொன்றை இரு முறை எழுதுவதைத் தவிர்ப்பதற்காக l'accent circonflexe – வளைந்த குறி எனும் குறி 1740 – 1762 காலப்பகுதியில் வெளிவந்த அகாட்தெமியின் அகராதி மூலம்தான் அறிமுகப்படுத்தப்பட்டது. ஆ – aa என்பது இப்போது â என எழுதப்படுகிறது.

| | a | e | i | o | u | ஒழுங்கு |
|---|---|---|---|---|---|---|
| accent aigu | | é | | | | கூர்ந்த குறி |
| accent grave | à | è | | | ù | கனத்த குறி |
| accent circonfléxe | â | ê | î | ô | û | வளைந்த குறி |
| tréma | | ë | ï | | ü | இரட்டைப்புள்ளிகள் |

## சொற்கள் – Les mots

சொற்கள் மொழியையும் சமுதாயத்தையும் பண்பாட்டினையும் காத்துவழங்கும் கருவூலங்களாகச் செயற்படுகின்றன என்கிறார் அகராதியியலறிஞர் எச்.சித்திரபுத்திரன். பிரெஞ்சும் சொல்வளம் மிக்க மொழியாகும். பிரெஞ்சு மொழிச்சொற்கள் பால் காட்டும் சொற்கள்.

## பிரெஞ்சுச் சொல்வளத்துக்கு உரம் தந்த மொழிகள்.

பிரெஞ்சு மொழியிலும் நீண்டசொற்கள் உண்டு!
ANTICONSTITUTIONNELLEMENT – 25 எழுத்துகள்!
CHLORURE D'AMINOMETHYLPYRIMINYHYETHYLMETHY– THIAZOLIUM – 49 எழுத்துகள்!

இந்த ஐரோப்பியமொழியில் அன்புறவுகளை வெளிப்படுத்த அன்பு, பாசம், காதல், நட்பு, நேசம், பக்தி எனப் பல சொற்கள் தமிழில் உள்ளன. ஆனால் இவ்வன்புறவுகளுக்கு ஈடாக amour எனும் ஒரு சொல்லே பயன்படுத்தப்படுகிறது. தொப்பிக்கு பிரெஞ்சில் chapeau, béret, bonnet, coiffe, casquette, casque, képi, toque, filet, mantille எனப் பலசொற்கள் உண்டு. வாசனைச் சரக்குச் சொற்கள் தமிழில் அதிகம். ஆனால் பாற்கட்டிகளுக்கும் வைன்களுக்கும் பிரெஞ்சில் சொற்கள் அதிகம். நாகரிகம் ஆடை மற்றும் பாலியல் தொடர்பான சொற்கள் நாகரிக மொழியில் தாராளமாக உள்ளன. எந்தெந்த நாடுகளில் பிரெஞ்சு வழங்கப்படுகிறதோ, அந்தந்த நாட்டு மொழிச் சொற்களையும் அது உள்வாங்கியிருக்கிறது. இம்மொழியின் சொல்வளத்தைப் பெருக்கிக்கொள்ள சற்றொப்ப 25 பிறமொழிகளிலிருந்து சொற்கள் இரவல் வாங்கப்பட்டிருக்கின்றன.

| உரம் தந்த மொழிகள் | % |
|---|---|
| இலத்தீன் | 86.5% |
| ஜெர்மனியம் | 1.5% |
| கொலுவா | 0.1% |
| ஸ்கன்டினேவியம் | 0.1% |
| அரபு | 0.1% |
| பிற மொழிகள் | 11.7 |

- **சொற்பிறப்பு வரலாறு - L'étymologie**

| Toilettes | biscuit |
|---|---|
| Toile என்றால் துண்டுத்துணி, Toilette என்றால் சிறிய துண்டுத்துணி எனவும் பொருள். சுத்தப்படுத்துவதற்கு பயன்படுத்தப்படும் சிறிய துணித்துண்டையே ஆரம்பத்தில் இது குறித்தது. பின்னர், இருபதாம் நூற்றாண்டில் கழுவும் இடம் என்ற அர்த்தத்தில் வழங்கப்பட்டு, இக்காலத்தில் கழிப்பறை, கழுவும் சிறிய அறை என்கிற கருத்துக்களில் வழக்கில் உள்ளது.<br>*Toile > Toilette > Toilettes* | *biscuit* பிஸ்கட் என நாம் அறிந்த சொல் ஆங்கிலச்சொல் என நினைக்கிறோம். ஆனால் இச்சொல் பிரெஞ்சுச் சொல் *bis, cuit* என்ற இரு சொற்கள் சேர்ந்துதான் *biscuit* உருவானது. bis என்றால் இரண்டு என்றும், cuit என்றால் வெந்தது, சமைக்கப்பட்டது என்றும் பொருள். cuit என்பது cuire என்ற வினையின் இறந்த கால வினைவடிவம்.<br>***biscuit = bis + cuit*** |

## இலக்கணம் – La grammaire

இலக்கணத்தைப் பிரெஞ்சில் la grammaire என அழைப்பர். இது grammatica என்கிற இலத்தீன் சொல்வழி வந்தது. பிரெஞ்சு இலக்கணமும் இலத்தீன் இலக்கணத்தின் தழுவலே. இங்கிலாந்தில் பிரெஞ்சு ஆட்சிக்காலத்தில், பிரெஞ்சு இலக்கணம் முதன்முதல் John Palsgrave எனும் ஆங்கிலேய இலக்கணியினால் 1553ஆம் ஆண்டில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டது. பிரெஞ்சு மொழியில் பின்னர்தான் எழுதப்பட்டது. பிரான்ஸில் 17ஆம் நூற்றாண்டில் Port Royal இலக்கணிகள் Grammaire générale à raisonner நூலை வெளியிட்டனர். 1936இல் Maurice Grevisse எனும் பெல்ஜிய பிரெஞ்சு இலக்கணி எழுதிய Le bon usage என்ற பெரிய இலக்கணப் பெட்டகம் பெரும் கீர்த்தி பெற்றது.

இலக்கணப்பாகுபாடு சொல்லிலக்கணம் – Parties du discours பெயர்ச்சொல் – le nom, சார்புச்சொல் – l'article, பதிலிடுபெயர் – le pronom, பெயரடை – l' adjectif, வினைச்சொல் – le verbe, வினையடை – l'adverbe, முன்னிடைச்சொல் – la preposition, கூட்டிடைச்சொல் – la conjonction என எட்டு வகையாகவும் பாகுபடுத்தப்பட்டுள்ளன. பிரெஞ்சு இலக்கண விதிமுறைகள் புறநடைகளை அதிகம் கொண்டுள்ளன. இம்மொழியில் பால் இலக்கணம் தனித்துவமானது. உயிருள்ளனவற்றின் ஆண் – பெண் பாகுபாடு மொழிகளில் இயற்கையானது. ஆனால் பிரெஞ்சில் உயிரற்றவற்றினதும் அஃறிணையினதும் உணர்ச்சிகளினதும் பால் பாகுபாடு செயற்கையானது. எடுத்துக்காட்டாக: வீடு – une maison, தண்ணீர் – l'eau, சந்திரன் – la lune, அழகு – la beauté, மொழி – la langue போன்றன பெண் பாலாகவும், புத்தகம் – un livre, பணம் – l'argent, சூரியன் – le soleil, அன்பு – l'amour, நாடு – un pays போன்றன ஆண்பாலாகவும் கொள்ளப்படுகின்றன. un, le, l' ஆகியன ஆண் பாலையும் une, la, l' ஆகியன பெண்பாலையும் சுட்டுகின்றன.

| Les parties du discours | சொல்லிலக்கணம் | உதாரணம் |
|---|---|---|
| Le nom | பெயர்ச்சொல் | maman, La France , un livre, une maison ,la beauté… |
| L'article | சார்புச்சொல் | un,une, le,la,l',des,les… |
| Le pronom | மாற்றுப்பெயர் | Je நான்,tu நீ, il அவன், அது, vous நீங்கள், elles அவர்கள், அவை... |
| L'adjectif | பெயரடை | bon, நல்ல, gentil அன்பான, rouge சிவப்பு.. |
| Le verbe | வினைச்சொல் | être இருத்தல், manger சாப்பிடுதல், prendre எடுத்தல் voir பார்த்தல்... |
| L'adverbe | வினையடை | peu கொஞ்சம், vite விரைவாக, facilement இலகுவாக.... |
| La préposition | முன்னிடைச்சொல் | à க்கு, இல், de இருந்து, devant முன்னால்... |
| La conjonction | சுவட்டிடைச்சொல் | et உம், ou அல்லது, mais ஆனால்... |

பிரெஞ்சில் பெயர்ச்சொல்லைக் குறிப்பிடும்கால், அது ஆணா அல்லது பெண்ணா எனப் பால் வேறுபாடு உணர்த்தும் சார்புச் சொல்லுடனேயே கையாளப்படல்வேண்டும். பெயர்ச் சொல்லின் எண், பாலைப் பொறுத்து பெயரடை, வினை என்பன மாறும் தன்மை உடையன. பிரெஞ்சில் படர்க்கையில் உயர்திணைக்கும் அஃறிணைக்கும் ஒரே பதிலிடுபெயர்கள் உள்ளன : il – அவன். அது, elle – அவள். அது. முறையே இருதிணைகளுக்கும் ஆண் பால் பன்மை ils – அவர்கள், அவை, பெண்பால் பன்மை elles – அவர்கள். அவை. பிரெஞ்சில் வினைச்சொல் சொல்லரசனாக விளங்குகிறது. வினையானது எழுவாயின் எண், பால், மூவிடம், காலம் ஆகியவற்றிற்கேற்ப பலமாற்றங்களைக் கொள்கிறது. பிரெஞ்சு வினைச்சொல் ஒன்று 252 திரிபுகளை அடைகிறது. வினைத்திரிபு – la conjugaison பிரெஞ்சில் சிக்கலான அமைப்புடையது.

| Le | petit | garçon | chante | bien | et | clairement | avec | joie. |
|---|---|---|---|---|---|---|---|---|
| \| | \| | \| | \| | \| | \| | \| | \| | \| |
| *art* | *adj* | *nom* | *verbe* | *adv* | *conj* | *adv* | *prép* | *nom* |

அந்தச் சிறிய பையன் நன்றாகவும் தெளிவாகவும் சந்தோசத்துடன் பாடுகிறான்.

வாக்கியம் – La phrase :

பிரெஞ்சு வாக்கிய அமைப்பு எழுவாய் – sujet (S) + பயனிலை(வினை) – verbe (V) + செயப்படுபொருள் – objet (O) என்ற ஒழுங்கில் அமைகிறது. சொற்களின் அமைவு S - V - O எனும் ஒழுங்கில் காணப்படுகிறது.

| தமிழ் வாக்கிய அமைப்பு | பிரெஞ்சு வாக்கிய அமைப்பு |
|---|---|
| நான் தமிழ் பேசுகிறேன்.<br>(S) + (O) + (V) | Je parle français நான் பேசுகிறேன் பிரெஞ்சு.<br>(S) + (V) + (O) |

## வாக்கியப் பகுப்பாய்வு L'analyse de la phrase

Maman aime papa. அம்மா அப்பாவை நேசிக்கிறார்.

Maman அம்மா : groupe nominal sujet (GNS) எழுவாய்ப் பெயர்த்தொகுதி

aime papa. அப்பாவை நேசிக்கிறார்: groupe verbal (GV) வினைத்தொகுதி

aime நேசிக்கிறார் : verbe (V) வினை.

Papa அப்பா : groupe nominal (GN) – (COD செயப்படுபொருள்)

பிரெஞ்சு இலக்கியவளம் நிறைந்த மொழி! இலக்கியப் படைப்புக்களுக்காகப் பதினான்கு நோபல் பரிசுகளைப் பெற்ற மொழி! இம்மொழியில் தொடக்ககாலத்தில் இலக்கணம்,



■ **இலக்கியம்** - La littérature:



இலக்கியத்தில் இலத்தீனின் ஊடுருவல் பின்னிப்பிணைந்து உள்ளது. இதன் விளைவாக 16 ஆம் நூற்றாண்டில் Joachim de Bellay எனும் புலவர் இலத்தீனை விடுத்து பிரெஞ்சில் எழுதுமாறு புலவர்களை, அறிஞர்களை வேண்டினார். சங்கநூல்களுக்குப் பின்வந்த ஆரம்பகால படைப்புகளில் இந்து மதத்தினதும் ஆரியப்பண்பாட்டினதும் ஆக்கிரமிப்பு அத்துவிதமாக கலந்திருந்தது. இவ்வாறே தொடக்ககாலப் பிரெஞ்சிய இலக்கியப் படைப்புகளிலும் சிலுவையுத்தம், நிலப்பிரபுத்துவ முறை, நூற்றாண்டுப்போர் ஆகியன பற்றி எடுத்தியம்பப்பட்டது. தொடக்ககால இலக்கியங்கள் பதினோராம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டு காலப்பகுதிகளில் தோன்றின. ஆரம்பத்தில் தோன்றியவை மன்னர்களின் வீரப்பிரதாபங்களை Chanson de geste எனும் வடிவில் கூறுவனவாக இருந்தன. பன்னிரண்டாம் நூற்றாண்டில்

மத்தியகாலப் பகுதிகளில் காதலை – காமத்தை மையப் பொருளாக வைத்து மென் இலக்கியங்கள் தோன்றின. இவற்றில் Les troubadours சிறப்பு வாய்ந்தது. தொடக்ககால ஆக்கங்களில் La chanson de Roland (1100), Tristan et Iseut (1200) என்பன முக்கியமானவை. பதினாறாம் நூற்றாண்டில் எழுச்சி பெற்று பதினேழாம் நூற்றாண்டிலிருந்து உன்னத வளர்ச்சி அடைந்து இன்று வரை ஏற்றம் பெற்றிருக்கிறது.



Un calligramme

பிரெஞ்சிய இலக்கியத்தை வளர்த்தவர்களில் Ronsard, Rabelais, Montaigne, Corneille, Racine,Molière, de la Fontaine, Boileau, Voltaire, Emile Zola, Chateaubriand, Victor Hugo, Balzac, Georges Sand, Flaubert, Maupassant, Anatole France, Albert Camus, Yourcenar போன்ற பலர் வரலாற்றில் அழியா இடம்பெற்றவர்கள். தமிழிலுள்ள பஞ்சதந்திரக் கதைகளை மிக ஒத்த புனைகதைகள் பிரெஞ்சிலும் உண்டு. காகமும் நரியும், கொக்கும் நரியும், நரியும் திராட்சைப்பழமும், முயலும் ஆமையும், ஓநாயும் ஆட்டுக்குட்டியும், உழைப்பாளி தந்தையும் பிள்ளைகளும், கழுதை விற்கச்சென்ற தகப்பனும் மகனும் எனப் பல கதைகள் ஒத்தமாதிரி உள்ளன. உதாரணமாக: தமிழ்க் காகத்தின் வாயில் வடையும், பிரெஞ்சுக்காகத்தின் வாயில் பாற்கட்டியும் இருக்கும். இவ்வாறே பேராசை பெருந்தரித்திரம் என்ற கதையில், கதைமாந்தராக தமிழில் பிச்சைக்கரானும், பிரெஞ்சில் பாற்காரியும் வருகின்றனர். பிரெஞ்சு இலக்கியப் படைப்புக்களுக்காக ஆறு இலக்கியப்பரிசுகள் பிரான்சில் வழங்கப்படுகின்றன. பிரெஞ்சு மொழிப் படைப்புகளுக்கு இதுவரை பன்னிரண்டு நோபல் பரிசுகள் கிடைத்திருக்கின்றன.

## பிரெஞ்சு அகராதிகள்

பிரான்ஸ் வரலாற்றில் முதலாவது பிரான்சுவா (Franҫois Ier), பதின்மூன்றாம் லூயிஸ் (Louis XIII), பதினான்காம் லூயிஸ் (Louis XIV) ஆகிய மூன்று மன்னர்களின் ஆட்சிக்காலத்தில்தான் பிரெஞ்சு மொழி வளர்ச்சியும் எழுச்சியும் உயர்ச்சியும் பெற்றது. 1539 இல் மன்னர் Franҫois Ier பிரெஞ்சை நிர்வாக மொழியாக அங்கீகரித்தார். பிரெஞ்சு மொழி பாதுகாப்புச்சட்டமான L'édit de Villers – Cotterêts 1549இல் பிரகடனம் செய்யப்பட்டது. அதுவரைக்கும் படைப்புகளை இலத்தீனில் படைப்பது பெருமையாகவும் உயர்வாகவும் கருதப்பட்டுவந்தது. படைப்புகளைப் பிரெஞ்சில் எழுதுவதைத் தூண்டுவதற்காக பிளேயாத் La Pleiade எனும் இலக்கிய அமைப்பை Joachim du Bellay தலைமையில் பிரெஞ்சுப் புலவர்கள் நிறுவினார்கள். பிரெஞ்சு மொழியை வளர்க்கவும், தூய்மைப்படுத்தவும், பிரெஞ்சு இலக்கண வரையறைகள் செய்வதற்கும், அகராதி தயாரிப்பதற்கும் என Academie franҫaise அகாத்டெமி ஃபிரான்ஸேய்ஸ் நிறுவப்பட்டது. இதனை Louis XIV இன் ஆட்சியில் தலைமை அமைச்சராக வீற்றிருந்த Richelieu 1635ஆம் ஆண்டு நிறுவினார். இந்த அரசு நிறுவனம் தனது முதல் அகராதியை Le Dictionnaire de l' Académie française எனும் பெயரில் 1694இல் வெளியிட்டது.

பிரான்ஸில் முதல் அகராதி அமைத்தவர் எனும் பெருமை Robert Estienne அச்சகக் காரரையே சேரும். இதனை அடிப்படையாகக்கொண்டு பிரெஞ்சு ஒரு மொழி அகராதியை Le Thresor de la langue franҫoise tant ancienne que moderne எனும் பெயரில் Jean Nicot(1530 – 1600) என்பவர் எழுதினார்.பிரெஞ்சு அகராதியின் நிலைச்சின்னம் போல் திகழ்பவர் Pierre Larousse. (1817–1865) லறூஸூக்குப் – Larousseக்குப் பின் இருபதாம் நூற்றாண்டின் அகராதியியலில் முன்னிலையில் நிற்பவர் றோபேர் – Robert.

## பிரெஞ்சு – தமிழ் கொண்டு கொடுப்பனவு

### தமிழில் வழங்கும் பிரெஞ்சியச் சொற்கள் :

பிஸ்கற் – biscuit, ரொய்லெட் – toilet, ரோந்து – ronde, ஓடிக்கொலோன், – eau de cologne பார்ளிமென்ற் ( பாராளுமன்றம்) – parlement, பூக்கே – bouquet, பட்டாளம் – bataillon, போத்தில் – bouteille, பொத்தான் – bouton, குசினி – cuisine, பாண்– pain (ஈழத்தமிழ்)

### பிரெஞ்சு இரவல் வாங்கிய தமிழ்ச்சொற்கள் :

சணை – சோறு, curry – கறி, gingembre – இஞ்சி, basmati – பஸ்மதி, vétiver – வெட்டி வேர். catamaran – கட்டுமரம், paria – பறையன். teck – தேக்குமரம், santal – சந்தனம் ஆகியன குறிப்பிடத்தக்கன.

### தமிழுக்குத் தொண்டாற்றிய பிரெஞ்சியர்கள் :

ஈஏரியல் என்பவர் திருக்குறளை 1767இலும், பேரறிஞர் Franςois GROS (கிரியாவின் அகராதியிலும் இவர் பங்களிப்பு உண்டு) பரிபாடலை 1968இலும், திருக்குறளின் காமத்துப்பாலை 1992 இலும் பிரெஞ்சில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். திருவிளையாடற் புராணம், ஆண்டாள் திருப்பாவை, கந்தபுராணம் ஆகியனவற்றை பேராசிரியர் Jean FELLIOZAT மொழி பெயர்த்திருக்கிறார். சீவகசிந்தாமணி, திருவாசகம், காரைக்காலம்மையார், தாயுமானவர், ஆகியனவும் பிரெஞ்சில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன.

### பிரெஞ்சிலிருந்து தமிழுக்கு வந்த வரவுகள் :

மோலிஎரின் Le bourgeois gentilhomme என்பது புதுப்பணக்காரன் எனவும், இயூ கோவின் Les Misérables ஏழைபடும் பாடு என சுத்தானந்தபாரதியாலும், Threse என்பது திரேசா என குயிலன் என்பவராலும், Exupery இன் Petit Prince என்பது குட்டி இளவரசன், Albert Camus இன் L'Etranger என்பது அந்நியன் ஸ்ரீராமாலும் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுத் தமிழுக்கு வரவாகியிருக்கின்றன.

### பிரெஞ்சிய அறிஞர்கள் படைத்த தமிழ் இலக்கணம் மற்றும் அகராதிகள் :

திராவிட மொழிகளின் வினையமைப்பியல், Manuel de la langue tamoule ஆகிய நூல்களை Julien Vinson 1878இல் எழுதினார். 1889இல் Martinet தமிழ் இலக்கணத்தைத் தமிழில் இயற்றினார். 1892இல் M.J.Baulez என்ற பிரெஞ்சியப் பாதிரியார் தமிழ் – பிரெஞ்சு இலக் கணத்தைப் படைத்தார். தமிழ் – பிரெஞ்சு (dictionnaire tamoul fran ςois) என இரு அகராதிகளை முறையே 1724,1734களில் பிரெஞ்சியரான Louis –Noél de Bourzes படைத்தார். வீரமாமுனிவர் எனத் தன்னை அழைத்துக்கொண்ட இத்தாலியரான Costanzo Giuseppe Beschi எனும் பன்மொழி வித்தகர் பிரெஞ்சு – தமிழ் (Petit dictionnaire franςois), தமிழ் – பிரெஞ்சு (Dictionnaire tamoul françois) ஆகிய அகராதிகளை 1744 இல் எழுதினார். அதன் பின்னர், புதுச்சேரியில் Dominique de Valence என்ற பிரெஞ்சு சாமியார் பிரெஞ்சு – தமிழ் அகராதியும் இலக்கணமும் (Dictionnaire et grammaire françois tamoul) 1745 இல் தயாரித்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் காலப்பகுதியில், அகராதித்தமிழ் எனும் பெயரில் பிரெஞ்சு – தமிழ், தமிழ் – பிரெஞ்சு (Dictionnaire français – tamoul et tamoul – français) இருமொழி அகராதியை Andre Blin எனும் தளபதி பாரிசில் 1831இல் எழுதினார். Eugène Burnouf எனும் மொழியியல் அறிஞர் பிரெஞ்சு – தமிழ், தமிழ் – பிரெஞ்சு சொற்கோவை ஒன்றைத் தயாரித்தார் எனத் தெரியவருகிறது. இவ்விரு மொழிகளிலும் நல்ல அகராதி இல்லை எனும் குறையைப் போக்குவதற்கு Louis –

Savinien Dupuis, Louis – Marie Mousset ஆகியவர்கள் தமிழ் – பிரெஞ்சு (Dictionnaire tamoulfrançais) அகராதியின் முதலாவது அடங்கலை 1855இலும், இரண்டாவது அடங்கலை 1862 இலும் புதுச்சேரியில் வெளியிட்டனர். இவர்கள் இதற்கு முன் 1846 இல் இலத்தீன் – பிரெஞ்சு – தமிழ் – (Dictionnarium Latino – Gallico – Tamulicum) மும்மொழி அகரமுதலியை எழுதியிருந்தனர் என்பது குறிப்படத்தக்கது. இவர்கள் தொடர்ந்து பிரெஞ்சு – தமிழ் (Dictionnaire français –tamoul) அகராதியினையும் மாற்றியமைத்தனர். இவர்களுக்குப் பின் தமிழ் – பிரெஞ்சு சொல்லகராதி களை Edouard – Simon Ariel, Jean –Baptiste – Achile – Antoine – Marie Lap, Ernest Martinet ஆக்கியிருக்கின்றனர்.

### பிரெஞ்சு – தமிழ் இலக்கணம் – அகராதிகள் எழுதிய ச.சச்சிதானந்தம் :

பிரான்ஸில், 1985 இல் பிரெஞ்சு மொழி எனது நண்பன்(இலக்கணம்) – Le français, c'est mon ami 1986 இல் Dictionnaire :français– tamoul – அகரமுதலி : பிரெஞ்சு –தமிழ் 1993 இல் Grammaire française பிரெஞ்சு – இலக்கணம், 1997 இல் Dictionnaire pratique : français– tamoulsrilankais – நடைமுறை அகரவரிசை : பிரெஞ்சு – இலங்கைத் தமிழ், Le français à l'usage des Tamouls – தமிழருக்கான பிரெஞ்சு மொழி வழிகாட்டி(இலக்கணம்), பிரெஞ்சுச் சிந்தனைகள் (கட்டுரைத் தொகுப்பு), பிரான்ஸ் நாடும் பிரெஞ்சு மக்களும், 2002 இல் விளக்கமான நல்ல பிரெஞ்சு – Le bon français detaille, 2005 இல் ஆங்கிலம் – பிரெஞ்சு ஒப்பீட்டுக்கற்கை என்ற மும்மொழிநூல், 2008 இல் தமிழ் – ஆங்கிலம் – பிரெஞ்சு சொல்வங்கி, தமிழ் – ஆங்கிலம், ஆங்கிலம் – பிரெஞ்சு, français– anglais, English – Français முதலான பொருள்வழி சொல்லகராதிகள், 2009 பிரெஞ்சு – தமிழ், தமிழ் – பிரெஞ்சு, சொல்லகராதி, 2010இல் வினா – விடை வடிவத்தில் தெளிவான பிரெஞ்சு இலக்கணம், 2022 இல் சொல் உலகம் (தமிழ் – ஆங்கிலம் – பிரெஞ்சு), முனைவர் தம்மிக ஜயசிங்கவுடன் இணைந்து நான்மொழி சொல்லகராதி (தமிழ் – ஆங்கிலம் – பிரெஞ்சு – சிங்களம்) முதலான நூல்கள் சதாசிவம் சச்சிதானந்தம் ஆகிய நான் எழுதி வெளிவந்தன.

### பிரெஞ்சு மொழி வளர்ச்சி

பிரெஞ்சு மொழி வளர்ச்சிக்கும் உயர்வுக்கும் பிரெஞ்சு அரசில் எப்போதும் பிரெஞ்சு மொழி அமைச்சு தனியாக அல்லது கலாச்சார அமைச்சின் பகுதியாக உண்டு. பிரெஞ்சு சொற்களில், இலக்கணத்தில் சீர்திருத்தம் செய்வதற்கும், பாதுகாப்பதற்கும், உயர்வழக்கு, இலக்கிய வழக்கு அகராதிகளை உருவாக்குவதற்கும் அரசு நிறுவனமாக 1635 இலிருந்து L'academie française – அகாட்தெமி ஃப்ரான்ஸேஸ் இயங்குகிறது. இம்மொழியை சர்வதேச ரீதியாக வளர்ப்பதற்கும் பேணுவதற்கும் 70 நாடுகள் (56 அங்கத்துவ நாடுகள், 14 பார்வையாளர் நாடுகள்) அங்கம் வகிக்கும் L'Organisation internationale de la Francophonie (OIF) – பிரெஞ்சு வழங்கும் சர்வதேச அமைப்பு செயற்படுகிறது. பிரெஞ்சு மொழியையும் பிரெஞ்சு நாகரிகத்தையும் கற்றுக்கொள்வதற்காக் L'Alliance française– அலியான்ஸ் .ப்ரான்ஸேஸ் எனும் பிரெஞ்சு அரச பாடசாலை 136 நாடுகளில் இயங்குகிறது. பிரெஞ்சு மொழிக்கு முதல் இடம் கொடுத்த பின்னர்தான் மற்ற மொழிக்கு அடுத்த இடம் கொடுப்பது பிரெஞ்சியரின் தனிப்பண்பு! செம்மொழிக்குரிய பண்புகள் நிரம்பி, இலக்கியத்திற்காகப் பதினான்கு நோபல் பரிசுகளைக் குவித்து பெருமதிப்புடன் போற்றப்படுகிறது பிரெஞ்சு மொழி. "யாம் அறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்" என பாரதியார் பெருமிதத்துடன் பாடியது போல் "தாம் அறிந்த மொழிகளிலே உயர்வான தெங்கும் காணோம்" என பிரெஞ்சியர் மொழிப்பற்றுடன் நடந்துகொள்வர்.

பிரான்ஸ் ஓர் பண்பாடான, செல்வந்த நாடாக உலகத்தவர்களுக்குத் தெரிகின்றது. பிரெஞ்சியர்களைப் பண்பட்டவர்களாக, செல்வந்தர்களாக, முன்னேறியவர்களாக, நாகரிக மானவர்களாகக் காட்டுவதில் அவர்தம் மொழியான பிரெஞ்சுக்கும் பெரும் பங்கு உண்டு. "கல்விக்கழகு கசடற மொழிதல்" என்பது போல் "கற்றவர்க்கு அழகு பிரெஞ்சு அறிந்திருத்தல்" என்னும் உன்னத நிலையில் பிரெஞ்சு இலங்குகின்றது.. Merci ! Au revoir!

# கோரண்டீனும் தனிப்பமும்

திரு. இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக்கழகம், மலேசியா



கோரண்ன்டீன் quarantine எனும் ஆங்கிலச் சொல்லுக்கான உண்மை விளக்கம் .

அண்மைய ஆண்டு கோறனி நச்சில் (Corona viruse ) வாயிலாகக் கடுஞ் சளிக் காய்ச்சல் இருமல் ஆட்கொல்லி நோய் உலக நோயாக , பெருந்தொற்று நோயாக (Pandemic ) ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்த வேளையில் பல்வேறு சொற்கள் அனைத்துத் தரப்பாரிடமும் புழக்கத்தில் வந்து கொண்டிருந்ததை நாம் கண்டோம்.

இதுவரை பரவலாக வழங்கப்படாத சொற்களெல்லாம் அக்கால் பலரும் அறியும் வண்ணம் ஏடுகளிலும் ஒலி ஒளி ஊடகங்களிலும் இயல்பாகிக் கொண்டிருந்தன.

இவற்றுள் ஒரு சொல்தான் கோரண்டீன் – quarantine எனும் ஆங்கிலச் சொல்லாகும். பல்வேறு ஆங்கிலச் சொற்களின் மூலங்களையும் வேர்களையும் வரலாறுகளையும் தேட முற்படுகின்ற வேளையில் இச்சொல்லின் வரலாறும் என்னைப் பெரிதும் ஈர்த்தது. யாரோ ஓர் அன்பர் வலிந்து இச்சொல் தமிழின் கரந்துறை எனும் சொல்லோடு தொடர்புடையது என ஒரு செய்தியைப் பதிவிட்டதைக் கண்ணுற்ற வேளையில்தான் இச்சொல் என்னைப் பெரிதும் ஈர்க்கலாயிற்று.

கி.பி 14 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பா முழுமையிலும் கொடிய கொள்ளைவாரி (plague) நோய் பேரளவு ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்தது. 1343 இல் தொடங்கிய இந்நோய் ஐரோப்பிய மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதி மக்களைத் துடைத்தொழித்தது என ஆய்வாளர்கள் கணிப்பிட்டனர். இதன் உச்சக்கட்டக் காலமாக ( picktime ) 1347 லிருந்து 1350 வரை எனக் குறிப்பிடுவர். மிகவும் சொல்லொண்ணாத் துன்பத்திற்கு ஐரோப்பிய மக்கள் ஆளாகினர்.

இக்கால் 1377 ஆம் ஆண்டு குரோசியாவின் உடுப்ரோவினிக் எனச் சொல்லப்படும் பழைய இரகுசா நகருக்குப் இந்தக் கொள்ளைவாரி நோயால் பாதிக்கப்பட்ட பகுதியிலிருந்து கப்பலொன்று வந்தது. இதை அறிந்த இரகுசா நகரின் உயர் மன்ற ஆட்சியாளர்கள் இக்கப்பலுக்கு எவரும் செல்லக் கூடாது எனத் தடை விதித்தனர்.

கப்பலிலுள்ளவர்களைக் கப்பலிலேயே இருக்குமாறும் கட்டளை இட்டனர். இந்தத் தடை ஆணை 30 நாள்கள் வரை முதற்கண் இடப்பட்டது. 30 நாள்கள் வரை இடப்பட்ட கடுந்தனிமைக்குரிய (isolation) தடை ஆணைக்கு திரண்டினோ ( trentino ) எனப் பெயர். திரண்டினோ என்றால் முப்பது எனப் பொருள்.

இதே போன்றதொரு சட்டத்தை ஏனைய நகரங்களிலும் நோயைக் கட்டுப்படுத்தும் நோக்கில் அடுத்த எண்பது நாள்களுக்கு விதித்தனர். இதனால் கப்பலுக்கான தடை மேலும் பத்து நாள்களாகக் கூட்டப்பட்டு 40 நாள்களாக்கப்பட்டது. இவ்வாறு நாற்பது நாள்களாக்கப்பட்ட இச்சட்டத்திற்குப் பெயர்தான் கோரண்டீனோ quarantino என்பது.

இதனால் திரண்டினோ trentino கோரண்டீனோ quarantino என்றானது. இந்தக் கோரண்டினோ கொரந்தா quaranta எனும் சொல்லிலிருந்து மருவியதாகும்.

கோரண்டினோ என்றால் உண்மையில் நாற்பது என்று பொருள்.

இதன் வேர் விளக்கத்தை இந்தோ ஐரோப்பிய வேர்ச்சொல் அகரமுதலிகளில் காண்கையில் இவ்வாறு குறிப்பிட்டிருந்தனர்.

From Old Catalan quaranta, from Old Occitan quaranta, from Latin quadr gint ("forty"), from Proto-Indo-European *k etwr (d) omt ("four-ten"). எனவும்

kWetwer-Four.

1. O-grade form *kwetwor-. 1. Probably Germanic *feld)wor- (with f- from following numeral *fimf, five; see penkwe). a. FOUR, from Old English f ower, four; b. FORTY, from Old English f owertig, forty; C. FOURTEEN; FORTNIGHT, from Old English f owert ne, fourteen (-t ne, ten; see dekm). 2. QUATRAIN; CATERCORNERED, QUATTROCENTO, from Latin quattuor, four. 3. CZARDAS, from Persian chah r, four, from Old Iranian cathwar , four.

II. Multiplicatives *kWeturs, *kwetrus, and combining forms *kWetur- *kwetru-. 1. CAHIER, CARILLON, CARNET, CASERN, QUATERNARY, QUATERNION, QUIRE', from Latin quater, four times. 2. CADRE, QUADRATE, QUADRILLE', QUARREL, QUARRY2; ESCADRILLE, SQUAD, SQUARE, TROCAR, from Latin quadrum, square. 3. QUADRI-; UNUNQUADIUM, from Latin quadri-, four. 4. QUADRANT, from Latin quadr ns, a fourth part. 5. QUARANTINE, from Latin quadr gint , forty (-gint , ten times; see dekm). 6. QUADRICENTENARY, from Latin quadri(n) gent , four hundred. 7. Variant form *kwet(w)r-. a. TETRA-, from Greek tetra-, four; b. TESSERA; DIATESSARON, from Greek tessares, tettares, four; C. TETRAD, from Greek tetras, group of four; d. zero-grade form *kwt(w)r-. TRAPEZIUM, from Greek tra-, four.

III. Ordinal adjective *kWetur-to-. 1a. FOURTH, from Old English f ortha, f owertha, fourth; b. FIRKIN, from Middle Dutch veerde, fourth; C. FARTHING, from Old English feorthing, f orthung, fourth part of a penny; a-c all from Germanic *fe(d) worthon-. 2. QUADRILLE?, QUADROON, QUART, QUARTAN, QUARTER, QUARTO; ECARTE, from Latin qu rtus, fourth, quarter.

[Pokorny kretyer-642.]

எனவும் இச்சொல்லின் வேர் விளக்கத்தைத் தெளிவுற வழங்கியுள்ளனர்.

தமிழில்

சட்டம்-சடம்-சடல்-சதர் - சதிர். சதுர்=நாற்கோணம், நாற்புறம், நான்கு.

சடல்-சடலம்-சதரம் - சதிரம். சதுரம் = நாற்கோணம், நாற்புறம், நான்கு. (வடமொழி வரலாறு.)எனப் பாவாணர் விளக்குவார். சட்டத்தின் திரிபே சதுரம் எனப் பாவாணரின் ஆய்வின் வழிப் பெறப்படும். சதுரம் தூய தென்சொல் என்பதே பாவாணர் கருத்து.

இன்று கோரண்டினின் பொருள் தெரியாமலேயே பலரும் கொரண்டீன் என்கின்றனர். கி.பி 1377 போல் நாம் யாரும் இன்று 40 நாள்கள் தனிமைப் படுத்தப்படுவதில்லை.. தொற்று நோய் நுண்ணிகளின் அரும்பல் காலத்தை வைத்தும் பிறருக்குத் தொற்றா வண்ணம் பிணியாளர்களுக்கு நோய் முற்றிலுமாகக் குணமாகும் காலத்தை வைத்துமே நோயாளர் தனிமைப்படுத்தப்படுகின்றனர்.

பெருந்தொற்று காலத்தில் உலகம் முழுமைக்கும் பல்வேறு நாடுகளில் பொதுமுடக்கம்(Lockdown)அறிவிக்கப்பெற்று நச்சில்கள் பிறருக்கும் தொற்றா வண்ணம் உரிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

இது பலருக்கும் துன்பத்தைத் தந்தாலும் உலக நலன் கருதி தம் நலன் கருதி நோன்புபோல் நோற்று இக்காலக்கட்டத்தைப் பொறைமை உணர்வோடு கடந்தனர்.

கோரண்டின் எனுஞ்சொல் உண்மையில் நாற்பது எனும் பொருளைத் தந்தாலும் தமிழில் நாம் தனிப்பம் எனல் சிறப்பு.

தனிப்பத்தில் வைக்கப்பட்டுள்ளனர்.

தனிப்பத்தில் உள்ளேன்.

தனிப்பஞ் செய்வது நல்லது

எனத் தனிப்பம் ( quarantine) எனுஞ் சொல்லை எளிதில் ஆளலாம்.

## பன்னிரு ஓரைகள்

| தமிழ் | வடமொழி | இலத்தீன் |
|---|---|---|
| மேழம் | மேஷம் | Aries |
| விடை | ரிஷபம் | Taurus |
| இரட்டை | மிதுனம் | Gemini |
| அலவன் | கர்க்கடகம் | Cancer |
| ஆளி | சிம்மம் | Leo |
| கன்னி | கன்னி | Virgo |
| துலை | துலா | Libra |
| நளி | விருச்சிகம் | Scorpion |
| சிலை | சாபம் | Sagittarius |
| சுறவம் | மகரம் | Capricorn |
| கும்பம் | கும்பம் | Aquarius |
| மீனம் | மீனம் | Pisces |

நன்றி : பண்டைய தமிழ நாகரிகமும் பண்பாடும்

# தமிழ்க் கலைக்கழகத்தின் 133–ஆவது கூட்டம்




16.05.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 133–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில்,அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன்,முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். திரு.ஆ. அரிமாப்பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 220 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 134–ஆவது கூட்டம்



23.05.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 134–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர்.திரு.ஆ. அரிமாப்பாமகன், மொழிபெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர் திருமதி இளவேனில் முல்லை மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 203 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# அகரமுதலி இயக்ககத்தின்
# துறைவாரியான ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்!

## 47 அரசுத்துறைகளுக்கும் அகரமுதலி இயக்ககப் பணியாளர்கள் நேரில் சென்று வழங்கினர் !
























செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 48 அரசுத்துறைகளுக்கான கலைச்சொற்கள் அடங்கிய துறைவாரியான ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்கள் உருவாக்கப்பட்டுள்ள நிலையில், அவற்றை அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களும் மற்றும் இயக்ககப் பணியாளர்களும் 16.05.2023, 17.05.2023, 18.05.2023 ஆகிய மூன்று நாள்களில் 47 அரசுத்துறைகளுக்கும் நேரில் சென்று வழங்கி, துறை அலுவலர்களிடம் நூல்களிலுள்ள கலைச்சொற்களை முழுமையாகப் பயன்படுத்துமாறு வேண்டுகோள் விடுத்தனர்.

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற இலக்கோடு செயலாற்றிவரும் தமிழ்நாடு அரசு, சட்டமன்றப்பேரவை தமிழ்வளர்ச்சித் துறை மானியக் கோரிக்கை அறிவிப்பின்படி, அரசுத் துறைகளின் புதிய கலைச்சொற்களைத் தொகுத்து ஆட்சிச்சொல் குறுநூலாக அச்சிட்டு, தமிழ் வளர்ச்சித் துறை மானியக் கோரிக்கையின் போது ஆண்டுதோறும் வெளியிடப்படும் என்று அறிவித்து அரசாணை பிறப்பித்தது.

அந்த அரசாணையின்படி, ஆட்சிச்சொல் குறுநூலுக்கான கலைச்சொற்களைத் தொகுக்கும்பொருட்டு, அகரமுதலி இயக்ககத்தால் அரசுத்துறைகளுக்கு நேரில் சென்று புதிய கலைச்சொல் கலந்தாய்வுக் கூட்டங்கள் நடத்தப்பெற்றன. அக்கூட்டங்களின் வாயிலாகப் பெறப்பட்ட துறைசார்ந்த கலைச்சொற்கள் சீராக்கத்திற்குப்பின், 48 அரசுத்துறைகளுக்கும் தனித்தனியாக ஆட்சிச்சொல்லகராதி குறுநூலாக அணியமாக்கப்பட்டு அரசு எழுதுபொருள் அச்சுத்துறையால் அச்சிடப்பெற்றுள்ளன.

அரசு எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை, அரசுப் பணியாளர் தேர்வாணையம், அருங்காட்சியகம், ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை, ஆவணக் காப்பகம் (ம) வரலாற்று ஆராய்ச்சித்துறை, இந்து சமய அறநிலையத்துறை, இயக்கூர்திகள் பராமரிப்புத்துறை, உணவுப்பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறை, உள்ளாட்சி நிதித் தணிக்கைத் துறை, ஊரக வளர்ச்சி (ம) பஞ்சாயத்துராஜ், கருவூலம் மற்றும் கணக்குத்துறை, கல்வித்துறை, கால்நடை பராமரிப்பு (ம) மருத்துவப் பணிகள், காவல்துறை, குடும்பநலத்துறை, கூட்டுறவுத்துறை, கைத்தறி மற்றும் துணி நூல் துறை, சமூக நலம் (ம) சத்துணவுத் திட்டத் துறை, சமூகப் பாதுகாப்புத்துறை, சர்க்கரைத்துறை, தொல்லியல்துறை, தொழில்நுட்பக் கல்வி இயக்ககம், தொழில் வணிகத்துறை, தொழிலாளர் துறை, நகர் ஊரமைப்புத் துறை, நகராட்சி நிருவாகத்துறை, நிலவியல் துறை, நெடுஞ்சாலைத்துறை, பட்டு வளர்ச்சித் துறை, பதிவுத்துறை, பால் உற்பத்தி மற்றும் பால்பண்ணை மேம்பாட்டுத் துறை, பிற்படுத்தப்பட்டோர், மிகவும் பிற்படுத்தப்பட்டோர் மற்றும் சீர்மரபினர் நலத்துறை, பொருளியல் மற்றும் புள்ளியல் துறை, பொது நூலகத் துறை, பொதுப்பணித்துறை, போக்குவரத்துத் துறை, மதிப்பீடு மற்றும் செயல்முறை ஆராய்ச்சித்துறை, மதுவிலக்கு, ஆயத் தீர்வை மற்றும் நன்னடத்தைத் துறை, மருத்துவக் கல்வி இயக்ககம், மாநிலத் திட்டக் குழு, மின் ஆய்வுத் துறை, மீன்வளத்துறை, முன்னாள் படைவீரர் நல இயக்ககம், வணிகவரித்துறை, வருவாய்த்துறை, வனத்துறை, வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சித்துறை, வேளாண்மைத்துறை ஆகிய 48 அரசுத் துறைகளுக்கும் துறைவாரியான ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

அவற்றுள் 47 துறைகளுக்கான ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்களை அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களும் இயக்ககப் பணியாளர்களும் எடுத்துச் சென்று அந்தந்தத் துறை அலுவலர்களை நேரில் சந்தித்து வழங்கினார்கள். அப்போது, துறை அலுவலர்களிடம் ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்களிலுள்ள கலைச்சொற்களை முழுமையாகப் பயன்படுத்துமாறு வேண்டுகோள் வைத்தனர். சேலத்தைத் தலைமையிடமாகக் கொண்டுள்ள பட்டுவளர்ச்சித் துறைக்கான நூல்கள் அஞ்சல்வழியாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன. 19.05.2023ஆம் நாள் தலைமைச் செயலகத்திலும் துறைவாரியான ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்கள் வழங்கப்பட்டன.

துறைவாரியான ஆட்சிச்சொல்லகராதி குறுநூல்களை ஆர்வத்துடன் பெற்றுக்கொண்ட துறை அலுவலர்கள், வெகுநாள்கள் கழித்து, துறைசார்ந்த கலைச்சொற்கள் அடங்கிய ஆட்சிச் சொல் குறுநூல் அச்சுப்படியாகக் கிடைத்திருப்பது மகிழ்ச்சியளிப்பதாகவும், ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கும், துறையின் நிருவாகப் பணிகளை முழுவதும் தமிழில் மேற்கொள்வதற்கும் இந்த ஆட்சிச்சொல் குறுநூல் மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்றும் கூறியதோடு, இதனைச் செயற்படுத்திய தமிழ்நாடு அரசுக்கு மிகுந்த நன்றியைத் தெரிவிப்பதாகக் கூறினார்கள்.

நூல்களை வழங்கும் நிகழ்வின்போது, அகரமுதலி இயக்ககக் கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து, தொகுப்பாளர்கள் திரு. கி. இராமர், திருமதி கு.சங்கீதா, பதிப்பாசிரியர்கள் திரு. கி. தமிழ்மணி, திரு. ஏ. காந்தி உள்ளிட்டோர் உடனிருந்தனர்.

# பாவேந்தரின் "எந்நாளோ?" பா மொழிபெயர்ப்பு




**முனைவர் கு.பாலசுப்பிரமணியன்**
மேனாள் மொழிபெயர்ப்புத் துணை இயக்குநர்
தமிழ்நாடு அரசு




## Would I ever be blessed with to hear...

Would I ever be blessed with to hear
A message that shall run thus:
"When people of an alien country
Out of arrogance, had committed,
A grave blunder- an abhorrent offence-
To our beloved Tamil, and to
The men of our own land
That had provoked dislike and hatred:
And on hearing that, our Tamils rushed to
The scene of crime and bet them
Blue and black,and pounded their spines!"
And, would I ever, on hearing that, rejoice
Merrily, and jump and dance, with joy! -6

Would I ever be blessed with to hear
A sweet message that will run thus: "
All the Tamils have won fame and reputation
With all merits and capabilities
Well established to hold the world at their sway
And humanity as a whole will dance
To the tunes set by the Tamils,
And it is ever ready to move on the direction swiftly
which was pointed out by the fingers of a Tamil
As though it was their destined path to march on!"
And would I ever on hearing that, rejoice,
Merrily, enjoying satisfaction and joy,
While dipping in a well of happiness! - 7

Would we ever reach a stage
To proudly acclaim the readiness
Of countless and innumerable Tamils
To fly beyond the horizon, and
Pilot our planes throughout
The nook and corner and length and breadth
Of the vast expanse of the Planet Earth, And to
terrify all the Countries;
To play musical instruments which shall
Synchronize with singing in Tamil
And to enchant and mesmerize
The humanity around the globe;
And also to wield dangerous weapons
And wage a fierce battle to destroy the enemies!8

Would I ever be blessed with to hear
The sweet and nectar-like message
That would pour into my ears
Like sweet and captivating music
That the 'Equality' between Men and Women of the Tamils
Is fully visualised in this land of proud Tamils
That they are seen inseparably alike
Like the eyes and the light, and Flowers and fragrance
Who are mutually, showering
Great ocean-like affection and love? -9

## எந்நாளோ?

தறுக்கினாற் பிறதேசத்தார்
தமிழன்பால் – என் நாட்டான்பால்
வெறுப்புறும் குற்றஞ்செய்தா
ராதலால் விரைந்தன்னாரை
நொறுக்கினார் முதுகெலும்பைத்
தமிழர்கள் என்றசேதி
குறித்தசொல்கேட் டின்பத்திற்
குதிக்கும் நாள் எந்தநாளோ? – 6

நாட்டும்சீர்த் தமிழன் இந்த
நானில மாயம்கண்டு
காட்டிய வழியிற் சென்று
கதிபெற வேண்டும் என்றே
ஆட்டும்சுட் டுவிரல் கண்டே
டிற்று வையம் என்று
கேட்டுநான் இன்ப ஊற்றுக்
கேணியிற் குளிர்ப்பதெந்நாள்? – 7

விண்ணிடை இரதம் ஊர்ந்து
மேதினி கலக்குதற்கும்
பண்ணிடைத் தமிழைச் சேர்த்துப்
பாரினை மயக்குதற்கும்
மண்ணிடை வாளையேந்திப்
பகைப்புலம் மாய்ப்பதற்கும்
எண்ணிலாத் தமிழர் உள்ளார்
எனும்நிலை காண்பதென்றோ? – 8

கண்களும் ஒளியும்போலக்
கவின் மலர் வாசம்போலப்
பெண்களும் ஆண்கள் தாமும்
பெருந்தமிழ் நாடுதன்னில்.
தண்கடல் நிகர்த்த அன்பால்
சமானத்தர் ஆனார் என்ற
பண்வந்து காதிற்பாயப்
பருகுநாள் எந்தநாளோ? – 9

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"என்றும் தமிழ் வளர்க – கலை

யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

– பாவேந்தர் பாரதிதாசன்

பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 85–89 வரையிலான அமர்வுகள் 2023 மே 12, 19, 26, சூன் 02, 09 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பல்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 12.05.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**
உரையாசிரியர், நூல் மதிப்புரையாளர்,
சென்னை



**திருமதி சாந்தினி சம்புலிங்கம் (எ) முல்லைநாச்சியார்**
எழுத்தாளர், டென்மார்க்



## 19.05.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**
ஹன்யாங் பல்கலைக்கழகம்,
சீயோல், தென்கொரியா



**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர், கோயம்புத்தூர்



**பேரா. மரு. போல் யோசெஃப்**
மேனாள் பேராசிரியர், கனடா



## 26.05.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. நடராசா சிறிரஞ்சன்**
சுங்கத் திணைக்கள அலுவலர்,
இலங்கை



**திரு. குழந்தைவேலன்**
மேனாள் உதவி இயக்குநர்,
தொல்லியல் துறை, சென்னை



**மரு. மேரி கியூரி போல்**
விரிவுரையாளர், ஆக்சுபோர்டு கல்லூரி,
ரொரண்டோ, கனடா



**முனைவர் தமிழ்ப்பரிதி மாரி**
உதவிப் பேராசிரியர்,
இதழியல் (ம) மக்கள் தொடர்பியல் துறை,
பெரியார் பல்கலைக்கழகம், சேலம்



## 02.06.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம், தைவான்



**முனைவர் இரா. துர்கா**
இணைப்பேராசிரியர், கணினி அறிவியல் துறை, வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பாரிசு



**திரு. க. முத்துவிக்னேசு**
ஒருங்கிணைப்பாளர், நொதுமி தமிழாய்வு நிறுவனம், இராசபாளையம்



## 09.06.2023 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



**திரு. த. சுதாகரன்**
வழக்கறிஞர், பிரான்சு



**பேரா. முனைவர் சித்திரை பொன் செல்வன்**
ஆராய்ச்சி இயக்குநர், அறிவியல் (ம) பொறியியல் துறைத் தலைவர், கர்டின் பல்கலைக்கழகம், துபாய்.



**முனைவர் இரா. அறிவழகன்**
தமிழியல் ஆய்வாளர், திருவாரூர்



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**

| | | |
|---|---|---|
| (PCL) posterior cruciate ligament | – | (பி.கு.நா.) பின் குறுக்கு நாண் |
| (MCL) medial collateral ligament | – | (உ.து.நா ) உட்புறத் துணை நாண் |
| (LCL) lateral collateral ligament | – | (வெ.து.நா) வெளிப்புறத் துணை நாண் |

**திருமதி சாந்தினி சம்புலிங்கம் (எ) முல்லைநாச்சியார்**

| | | |
|---|---|---|
| Smart home | – | தொழில்நுட்பகம் |
| Back pay | – | விருப்ப ஓய்வு |
| Fireproof dish | – | சூளைக்கலம் |

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

| | | |
|---|---|---|
| Ember | – | கரிக்கங்கு |
| Interfaith | – | பன்மதச்சார்பு |
| Internecine | – | உட்பகை முரண் |

**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**

| | | |
|---|---|---|
| Aphthous ulcers | – | உதட்டுப்புண் |
| Cheilosis | – | உதடுவறள் நிலை |
| Choledocholithotomy | – | பித்தநாள அகற்று மருத்துவம் |

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

| | | |
|---|---|---|
| **பேரா. மரு. போல் யோசெஃப்** | | |
| Megaloblastic anemia | – | பருத்த செங்குருதியணுச் சோகை. |
| Sickle cell anemia | – | அரிவாளுரு செங்குருதியணுச் சோகை. |
| Hemoglobin | – | சிவப்பணுச் சிறுகோளப் புரதம். |
| **திருமதி வெ. காயத்ரி** | | |
| Independent Press | – | தற்சார்பு பதிப்பகம் |
| Perfect Bind | – | உகந்த நூற்கட்டு |
| Trim Size | – | ஒட்டுமொத்த பக்க அளவு |
| **திரு. நடராசா சிறிரஞ்சன்** | | |
| Hedge | – | இழப்புக் காப்பு |
| Marketing myopia | – | சந்தைப்படுத்தல் குறுநோக்கு |
| Primagravida | – | தலைப்பிள்ளைத்தாச்சி |
| **மரு. மேரி கியூரி போல்** | | |
| Dental sealant | – | பல் தடுப்பொட்டு |
| Dental light curing units | – | ஒளிப்பதனி |
| Chemical cure | – | வேதிமப்பதனி |
| **திரு. குழந்தைவேலன்** | | |
| ஜப்தி | – | வன்பற்று |
| ஜீவனாம்சம் | – | கொட்டு இலக்கை |
| வில்லங்கம் | – | களன் |
| **முனைவர் தமிழ்ப்பரிதி மாரி** | | |
| Portrait page | – | செங்குத்துநிலை |
| Column | – | நெடுவரிசை |
| Tap | – | தத்தல் |
| **முனைவர் ஜெ. வினாயகம்** | | |
| Iodination | – | ஊதாவாக்கம் |
| Iodobenzene | – | ஊதநீவம் |
| HydrogenIodide | – | நீரூதாயம் |

| | | |
|---|---|---|
| **பொறிஞர் பத்மப்ரியா இராகவன்** | | |
| Singulism | – | ஒற்றையம் |
| Ikigai | – | உயிர்ப்பூக்கி / உயிர்ப்பி |
| N – gram | – | சொல்லலகு |
| **முனைவர் இரா. துர்கா** | | |
| Applet | – | குறுநிரல் |
| Drum plotter | – | உருளை வரைவு |
| Sutb | – | குறங்கட்டுரை |
| **திரு. க. முத்துவிக்னேசு** | | |
| Data visualization tool | – | தரவு காணி |
| Unary computer | – | ஒருமக் கணினி |
| Unicast | – | ஒருமப் பரப்பி |
| **திரு. இரா. திருமாவளவன்** | | |
| Aphelion | – | சேயெல்லி |
| Perihelion | – | அருகெல்லி |
| Smart toothbrush | – | திறன் பற்பரசி |
| **பேரா. முனைவர் சித்திரை பொன் செல்வன்** | | |
| Photovoltaic cell | – | ஒளிமின்னழுத்த அறை |
| Industrial symbiosis | – | தொழில்துறைப் பன்முனைப் பயன் |
| Ecological footprint | – | சூழலியல் தடம் |
| **திரு. த. சுதாகரன்** | | |
| Courts custody | – | மன்றின் பாதுகாப்பு |
| Acquittal | – | விடுதலை |
| Seattle judgement | – | இணக்கத் தீர்ப்பு |
| **முனைவர் இரா. அறிவழகன்** | | |
| Boy bestie | – | காதற்பாங்கன் |
| Hellscape | – | ஊக்கமில்லுணர்வு |
| Antifragile | – | திடீராற்றல் |

# தமிழில் கலைச்சொல் தேடல்

தொடர்ச்சி




பொறிஞர் பா.வே. இரத்தினம்

பயிற்றாசிரியர்,

பெங்களூர்


அறிவியலில் உண்மைகளைச் சுருக்கமாகப் புரிந்துகொள்ள வரையறுத்தல் (Defining) எனும் உத்தி கையாளப்படுகிறது. வரையறுத்தலால் இரு பயன்கள் கிடைக்கின்றன.

1. மிகச் சுருக்கமாக எழுதப்படுவது

2.மனத்தில் நிறுத்திக்கொள்ள ஏற்றவையாக இருப்பது

இதனைச் செவ்வனே செய்யத் தமிழில் குறள்வழியைப் பின்பற்றலாம்.

## பழந்தமிழ்ச் சொற்களுக்கு உயிரூட்டல்

இன்று வழக்கில் இல்லாத பழஞ்சொற்களைக் கண்டு அவற்றை இன்று எவ்வாறு பயன்படுத்தலாம் என ஆய்தல் மிகப் பயன்தரும்.

தமிழின் பழஞ்சொற்கள் இன்றும் கன்னடம், தெலுங்கு மொழிகளில் வழக்கில் உள்ளன. எ.டு.

| தமிழ் | கன்னடம் | தெலுங்கு |
|---|---|---|
| அடவி(காடு) | காடு | அடவி |
| இழி (இறங்கு) | இளி | -- |

தமிழும் மற்ற திராவிட மொழிகளும் அறிந்தவர், பழந்தமிழ்ச் சொற்கள் அம்மொழிகளில் விரவி இருப்பதைக் காணமுடியும். எனவே பழந்தமிழ்ச் சொற்களை அறிவியலில் பயனிட்டால் மற்ற மொழியினரும் அவற்றைப் பின்பற்றும் வாய்ப்பு உள்ளது.

தமிழ் இலக்கியம் படிப்போர், முனைவர்பட்ட ஆய்வு செய்வோர், இவ்வாறு சொற்களைப் பட்டியலிட்டு, தமிழ் வளர்ச்சிக்கான இணையத்தில் வெளியிட்டால், அச்சொற்களுக்குப் புதிய மெருகேற்றி அறிவியலில் பயன்படுத்த முடியும்.

## இளைஞர்களை ஊக்குவித்தல்

மாணவர்களை ஊக்குவிக்கச் சில வழிமுறைகள்

1. சொற்பிறப்பியல் என்று தேர்வுப்பாடம் (Elective) அறிமுகப்படுத்தி, அறிவியல் மாணவர்களுக்கு, இப்பாடம் படிக்க ஊக்கத்தொகை வழங்கலாம்

2.பொதுமக்களும் மாணவர்களும் சொற்குவையில் சொல்லளித்தால், அவை ஏற்கப்பட்டால் சான்றிதழுடன்,பரிசுத்தொகை மற்றும் (Credit point) வரவு அடையாளம் வழங்கலாம். இது மாணவர்களுக்கு மேற்படிப்பில் சலுகை பெறவும், வேலைவாய்ப்புகளுக்கு இட ஒதுக்கீட்டில் பயன்பெறவும் வழிவகுக்கும். இதனால் தமிழில் பொறியியல் வேகமாக வளரும்.

3.மேலும், தமிழறிந்த பொறியியல், மருத்துவத் தொழில்நுட்ப வல்லுநர்கள் தமிழில் பாடப் புத்தகங்களை வெளியிட அரசு பல வழிகளை வகுக்க வேண்டும். அப்போது மேலைக் கலைகள் தமிழில் ஓங்கும் என்பதில் ஐயமில்லை.

## வெளிநாட்டு பல்கலைக்கழகங்களில் தமிழ் இருக்கையின் பங்களிப்பு

சீரான கலைச்சொற்களைத் தரப்படுத்திப் பயன்படுத்தக் கலைச்சொல் மையங்கள் இஸ்ரேல், செக்கோசுலோவாகியா, மலேசியா, இந்தோனேசியா போன்ற நாடுகளில் உள்ளன என்று "தமிழ் வளர்க்கும் அறிவியல்" எனும் நூலில் அதன்

ஆசிரியர் திரு. இராம.சுந்தரம் அவர்கள் தெரிவித்துள்ளார். மேலும் இவற்றை ஒன்றுபடுத்தும் International Information Center for Terminology எனும் அமைப்பும் வியன்னாவில் இயங்குவதாகவும் அவர் கூறுகிறார்.

எனவே தமிழ் இருக்கைகள் (Tamil Chair) இலண்டனில் உள்ளது போன்றவை இவ்வமைப்பில் இணைந்தால், மேலை மொழிகளில் புதிய சொல்லாக்கம் தரப்படுத்தப்படும்போது (at the time of standardisation) தமிழிலும் அவற்றுக்கு நிகரான சொற்களைக் கொண்டுவர முடியும். மேலும், கிரேக்கம், இலத்தீன் மொழிகள் போல் தமிழிலும் தொன்மை வேர்ச்சொற்கள் உள்ளன. அவற்றையும் ஆங்கிலத்தில் கலைச்சொல்லாக்கும் காலமும் வரலாம்.

பன்னாட்டு கலைச்சொல் அமைப்புகளில் இவ்விதம் இணைவது நம் பழந்தமிழ்ச் சொற்கள் உலகளவில் வலம்வர வாய்ப்பளிக்கும்.

### சொற்குவை அமைப்புக்கு வேண்டுகோள்

1. ஆங்கிலக் கலைச்சொற்களின் மூலம், வரலாறு போன்ற தகவல்கள், இணையத்தளத்தில் கிடைத்தால், கலைச்சொல்லளிப்பவர் எண்ணிக்கை அதிகரிக்க வாய்ப்புள்ளது. ஏனெனில், தற்போது சொல் வழங்குவோர் தங்களிடம் உள்ள (குறைந்த அளவிலான) தரவுகளின் அடிப்படையில் குறைவான சொற்களையே வழங்க முடிகிறது.

2. சொற்பெருக்கப் பணிக்கான பல புத்தகங்கள் வழிகாட்டிகளாகத் தமிழில் உள்ளன.

எ.டு.

1. தமிழ் வளர்க்கும் அறிவியல் – இராம. சுந்தரம்

2. அறிவியல் தமிழ் – முனைவர் வா. செ. குழந்தைசாமி

3. தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடுகள்

4. மாநாடுகளில் அளிக்கப்பட்ட கட்டுரைகள்

5. தேவநேயப் பாவாணர் நூல்கள்

இப்புத்தகங்களை இருநூற்றுக்கும் மேற்பட்ட தரமான சொற்களை அளிப்பவருக்குச் சான்றிதழுடன் சேர்த்துப் பரிசளித்தால், அவர்கள் சொற்குவையைச் சொல்மலை ஆக்குவார்கள் என்றே நம்பலாம்.

மேற்குறித்த செயற்பாடுகள் நடைமுறையில் வந்தால் சொற்பெருக்குடன், தமிழில் தரமான பொறியியல், தொழில்நுட்பக் கட்டுரைகள், பாடநூல்கள் போன்றவையும் பெருகித் தமிழன்னை மீண்டும் உலகில் ஆட்சி செய்வாள் என்பது திண்ணம்.

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்

திருக்குறள் 200